








வராகி வாக்கு பீடம்

# ஸ்ரீ அஷ்ட வராகி திருக்கோவில் குட முழுக்கு விழா மலர்

நாள் : 30.04.2009

இடம் : சாலாமேடு போகும் வழி, விழுப்புரம்.

அன்புள்ள ஆன்மீக அன்பர்களே! நமது வராகி வாக்கு பீடம் தொடங்கி பத்து ஆண்டுகளுக்கும் மேலாகி வருகிறது. தினசரி மாலை 7.30 மணிக்கு பூஜையின் போது போற்றப்படும் அர்ச்சனைகள்.

உடல் பிணி, துர் தேவதையின் தொல்லைகள், சகல காரியத்திலும் தடை, இவைகளில் இருந்து விடுபடவும் சுபிட்ஷமான வாழ்வு பெறவும் பிரதி மாதம் தோறும் நடைபெறும் அமாவாசை பூஜையில் கலந்துக் கொண்டு அம்மன் அருள்பெற அழைக்கிறோம்.

திருமண தடை விலக, மாங்கள்யம் பலம் பெற, அஷ்ட லட்சுமி ஐஸ்வரியம் கிடைத்திட பிரதி மாதம் பௌர்ணமி தோறும் மாலை 7.30 மணிக்கு நடைபெறும் திருவிளக்கு பூஜையில் கலந்துக் கொண்டு அம்மன் அருள் பெற அழைக்கிறோம்.

**இறையருள்**

**சாக்தத ஸ்ரீஸ்ரீ மகேஷ்ராம்**

## தாய் தந்தை வணக்கம்

தாயிற் சிறந்த கோயிலும் இல்லை
தாயிற் சிறந்த தெய்வமும் இல்லை
அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்
அரவணைத்து வழிகாட்டும் அன்புதெய்வம்

## குரு துதி

தெளிவு குருவின் திருமேனி காண்டல் !
தெளிவு குருவின் திருநாமம் செப்பல் !
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல் !
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே !

## விநாயகர் துதி

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றினை
நந்தி மகன்தனை, ஞானக்கொழுந்தினை
புந்தியில் வைத்து அடியை போற்றுகின்றேனே !

## சங்கல்பம்

எல்லாம் வல்ல பரம்பொருளே! ஈரேழு பதினான்கு லோகத்திலும் பஞ்ச பூதமாய் விளங்கும் தெய்வீக சக்திகளே, ஈராறு ஆழ்வார்களே, அறுபத்து மூன்று நாயன்மார்களே, சப்தரிஷிகளே, எங்கள் குடும்ப முன்னோர்களே, குலதெய்வங்களே! சுப கோத்திரத்தில் பிறந்த சுப நட்சத்திரத்தில் பிறந்த மங்கள பெயருடைய நான் செய்கின்ற வராகி பூஜையில் தவறுகள் இருப்பின் பொறுத்து காத்தருள வேண்டுகிறேன்.

(உங்கள் கோத்திரம், பெயர், நட்சத்திரம், சொல்லி சங்கல்பம் செய்யவும்.)

## விநாயகர் அர்ச்சனை

ஓம் ஐங்கரனே போற்றி !
ஓம் வல்லபகணபதி போற்றி !
ஓம் கபில கணபதியே போற்றி !
ஓம் உச்சிஷ்ட கணபதியே போற்றி !
ஓம் சித்தி கணபதியே போற்றி !
ஓம் புத்தி கணபதியே போற்றி !
ஓம் செல்வ கணபதியே போற்றி !
ஓம் ஔவை கணபதியே போற்றி !
ஓம் ஆறுமுகன் சோதரனே போற்றி !
ஓம் அனைவருக்கும் அருள்பவனே போற்றி ! போற்றி !

வினாயகருக்கு தூபதீப நைவேத்யம் செய்யவும். வினாயகர் பெருமானிடம் கோரிக்கை கூறி, வினாயகர் பெருமானை வலது பக்கமாக கையால் நகற்றி வராகி பூஜையை தொடங்க வேண்டும்.

## திருப்பள்ளியெழுச்சி

கருத்தில் நின்ற கணபதியை கைதொழுதிட ஒரு குறையேதுமில்லையே! பைரவன் துணையே, பவள வாய் செல்வியே! மாமயிலையில் உறைபவளே! நவமணி நாயகியே! திரு பூஜை தொடங்கும் அந்திநேரம் திருப்பள்ளி எழுந்தருள்வாயே!

மரகத கோட்டை தன்னில் மாணிக்கமே, உன்னை வைத்து மணமிகு பன்னீருடன், பால், தேன் அபிஷேகம், ஆராதனை செய்து, சீரான பட்டு துகிலுடுத்தி, பிச்சி செண்பகம், அரளி மாலையோடு, பூசை ஏற்றிடவே திருப்பள்ளி எழுந்தருள் வாயே!

வர்த்தாளி எழுகவே, அஞ்சா எழுகவே, சேனா எழுகவே, மாமயிலை பீட நாயகி எழுகவே, மகேஷ்ராம் போற்றும் மகாவராகியே, எழுக, எழுகவே!

## வசியம் - வராகி அழைத்தல்

இருகுழை கோமளம் தாள் புஷ்பராகம் இரண்டு கண்ணும் குரு மணி நீலம் கை கோமேதகம் நகம் கூர்வயிரம் திருநகை முத்துக் கனிவாய் பவளம் சிறந்தவல்லி மரகதமாம் திருமேனியும் பச்சை மாணிக்கமே!

## அமருதல்

முக்கோணம், ஐங்கோணம், அறுகோணம், அதன் வெளியே இருநான்கு இதழ் இட்டு பிரம்மி, மகேஷ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வர்த்தாளி, நரசிங்கி, இந்திராணி, சாமுண்டி முறையான திக்கில் அமர்த்தி, அதன் நடுவே முக்கோணம் துலங்கும், வட்டத்தில் வராகியை அமர்த்தி, அர்ச்சித்து, ஆராதித்து அடிபணிவோம் !

## மூலமந்திரம்

ஓம் ஐம் க்லௌம் ஐம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி வாராஹி வாரஹி வராஹமுகி வராஹமுகி அந்தே அந்தினி நம: ருந்தே ருந்தினி நம: | ஜம்பே ஜம்பினி நம: | மோஹே மோஹினி நம: | ஸதம்பே ஸ்தம்பினி நம: | ஸர்வ துஷ்டப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் ஸர்வ வாக் சித்த சக்ஷுர் முககதி ஜிஹ்வா ஸ்தம்பனம் குரு குரு சீக்ரம் வச்யம் ஐம் க்லௌம் ட: ட: ட: ட: ஹும் பட் ஸ்வாஹா ||

## அர்ச்சனை

ஓம் சக்தியே வராகியே போற்றி !

ஓம் சக்தியே அஷ்ட புஜ வராகியே போற்றி !

ஓம் சக்தியே அகிலாண்ட ஈஸ்வரியே போற்றி !

ஓம் சக்தியே அஞ்ஞா சக்ரேஸ்வரியே போற்றி !

ஓம் சக்தியே அருளே ஞான வராகியே போற்றி !

ஓம் சக்தியே அடியவற்கு அருளும் தாயே போற்றி !

ஓம் சக்தியே அருள் அரசி வராகியே போற்றி !

ஓம் சக்தியே அந்தாதியில் உறையும் வராகியே போற்றி !

ஓம் சக்தியே ஆற்றல் மிகு வராகியே போற்றி !

ஓம் சக்தியே ஆட்கொள்ளும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆனந்தம் தரும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆளும் மனோன்மணி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆள்பவர் வணங்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆழியுள் ஆழி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆனந்த பூஜை ஏற்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆபத்தில் காக்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆறுமுகன் தாயே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஆசை அழிப்பவளே வராகியே போற்றி !
ஓம் சக்தியே இகபரசுகம் அளிக்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே இளகிய மனம்கொண்ட வராகியே போற்றி !
ஓம் சக்தியே இன்னல் தவிர்க்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே இசைக்கும் இசையே வராகியே போற்றி !
ஓம் சக்தியே இமையவன் துணையே வராகியே போற்றி !
ஓம் சக்தியே இருளை அகற்றிய ஒளியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே இடியெனவருவாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே இதய நாயகியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே இச்சை அறுக்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே இச்சா சக்தி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஈன்றவர்களை காக்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஈகை உள்ளம் கொண்ட வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஈடில்லா தெய்வமே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஈன்ற தாயே வராகியே போற்றி !
ஓம் சக்தியே உலக நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே உதவிடும் அரசியே வராகியே போற்றி !

ஓம் சக்தியே உமையவள் வடிவே வராகியே போற்றி !
ஓம் சக்தியே உழுபவன் தலைவியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே உழுபடை ஏந்திய வராகியே போற்றி !
ஓம் சக்தியே உயிரே உடலே வராகியே போற்றி !
ஓம் சக்தியே உடலே ஒளியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே உழுதோம் தொழுவோம் வராகியே போற்றி !
ஓம் சக்தியே உயர் நிலை தருவாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே உதிக்கும் கதிரே வராகியே போற்றி !
ஓம் சக்தியே உன்மத்த வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஊமத்தம் பூ சூடும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஊர் காவல் நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஊக்கம் அளிப்பாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஈசனுடன் அமர்ந்தாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே எங்கள் உள்ளம் அமர்ந்த வராகியே போற்றி !
ஓம் சக்தியே என்றும் கவிபாட வைத்தாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே எங்கும் நிலையானவளே வராகியே போற்றி !
ஓம் சக்தியே என்றும் எம்மை ஆளும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஏற்றம் தரும் தலைவியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஏழைகளின் நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஏழு பிறப்பையும் அறுப்பாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஏவல் தலைவியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஏழ் இசை நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஐங்கரன் தாயே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஐயம் தவிர்க்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஐவர் தாயாம் வராகியே போற்றி !

ஓம் சக்தியே ஒப்பில்லா மணியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஒளி தரும் விளக்கே வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஓதுவோர்க்கு இனிய வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஓம்கார நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஒளஷத நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே ஒளவைக்கு அருளிய வராகியே போற்றி !
ஓம் சக்தியே கண்ணின் மணியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே கருத்தினில் உறைவாய் வராகியே போற்றி !
ஓம் சக்தியே கற்பகத்தாயே வராகியே போற்றி !
ஓம் சக்தியே கருணைக் கடலே வராகியே போற்றி !
ஓம் சக்தியே கபாலி துணையே வராகியே போற்றி !
ஓம் சக்தியே காசிநகர்தனில் உறையும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே காளியே மாரியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே காண்போரை ஈர்க்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே கிரிசக்ர ரதம் உடைய வராகியே போற்றி !
ஓம் சக்தியே கிளியேந்திய கரமுடைய வராகியே போற்றி !
ஓம் சக்தியே குற்றம் பொறுக்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே குளிர் மதி சூடிய வராகியே போற்றி !
ஓம் சக்தியே கூர்மதி நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே கேட்டதை தரும் தாயே வராகியே போற்றி !
ஓம் சக்தியே கேள்வி நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சங்கடம் தீர்க்கும் வராகியே போற்றி !
ஓம் சக்தியே சக்தி சடாதரி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சங்கரி கௌமாரி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சங்கம் வளர்க்கும் வராகியே போற்றி !

ஓம் சக்தியே பஞ்சமி திதி தேவியே வராகியே போற்றி !
ஓம் சக்தியே தண்ட நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சங்கேத சமயேஸ்வரி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சமய சங்கேதா வராகியே போற்றி !
ஓம் சக்தியே போத்ரிணி சிவவர்தாளி வராகியே போற்றி !
ஓம் சக்தியே மகாசேனா அஞ்சா வராகியே போற்றி !
ஓம் சக்தியே மகாகாளி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சக்ரேஸ்வரி அரிக்னி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சதுர்புஜமுடைய வராகியே போற்றி !
ஓம் சக்தியே நவகிரக நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே நவசக்தி நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே நவமணி நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே நாராயணி ரூபிணி வராகியே போற்றி !
ஓம் சக்தியே நவராத்திரிநாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே சீதை தாயே வராகியே போற்றி !
ஓம் சக்தியே சியாமள தேவி வராகியே போற்றி !
ஓம் சக்தியே செல்வ நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே செங்கோல் தலைவி வராகியே போற்றி !
ஓம் சக்தியே மாணிக்கமே மரகதமே வராகியே போற்றி !
ஓம் சக்தியே மயிலை நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே செண்பகமே அகிலாண்ட வராகியே போற்றி !
ஓம் சக்தியே மங்கல நாயகி வராகியே போற்றி !
ஓம் சக்தியே மக்கள் தலைவி வராகியே போற்றி !
ஓம் சக்தியே மகேஷ்ராம் பூஜை ஏற்கும் வராகி தேவியே
போற்றி ! போற்றி ! போற்றி !

## பைரவர் துதி

ஓம் பைரவா சரணம் !
ஓம் ஓம்காரபைரவா சரணம் !
ஓம் ஆதிபைரவா சரணம் !
ஓம் ஸ்வர்ணபைரவா சரணம் !
ஓம் ஜோதிபைரவா சரணம் ! சரணம் ! சரணம் !

# ஸ்ரீ வராகி மாலை

## வசீகரணம்

இருகுழை கோமளம் தாள் புஷ்பராகம்இரண்டுகண்ணும்
குரு மணி நீலம் கை கோமேதகம் நகம் கூர்வயிரம்
திருநகை முத்துக் கனிவாய் பவளம் சிறந்தவல்லி மரகதமாம்
திருமேனியும் பச்சை மாணிக்கமே.

## காட்சி

தோராத வட்டம் முக்கோணம் ஷட்கோணம் துலங்கு வட்டத்து
ஈராறிதழ்இட்டு ரீங்காரம் உள்ளிட் டதுநடுவே
ஆராதனைசெய்து அருச்சித்துப் பூஜித்தபடி பணிந்தால்
வாராதிராள் அல்லவோ அலைஞான வாராஹியுமே.

## பகை தடுப்பு

மெய்ச்சிறத்தாற்பணியார் மனம் காயம் மிகவெகுண்டு
கைச்சிரத் தேந்திப் புலால்நிணம் நாறக் கடித்து குதறி
வச்சிரம் தந்த முகப்பணியாற் குத்தி வாய்கடித்துப்
பச்சிரத்தம் குடிப்பாளே வாராஹி பகைஞரையே.

## மயக்கு (தன்டினி)

படிக்கும் பெரும்புகழ்ப் பஞ்சமி அன்பர் பகைஞர்தமை
அடிக்கும் இரும்புத் தடிகொண்டு பேய்கள் அவர் குருதி
குடிக்கும் குடர்கொண்ட தோள்மாலை இட்டுக் குலாவிமன்றில்
நடிக்கும் வாராஹி பதினா லுலகம் நடுங்கிடவே.

## வெற்றி ஈர்ப்பு

நடுங்கா வகைஅன்பர் நெஞ்சினிற் புக்கவர் நண்ணாலரைக்
கொடும்காளி உண்ணக் கொடுக்கும் குருதிகள் கொப்பளித்
திட்டிடும்பாரக் கொங்கையின் மீதே இரத்தத் திலகம்இடும்
தொடும்கார் மனோன்மணி வாராஹிநீலி தொழில் இதுவே.

## உச்சாடணம்

வேய்க்குலம் அன்னதிண்தோளாள் வாராஹிதன் மெய்யன்பரை
நோய்க்குலம் என்ன இடுப்பு செய்வார்தலை நொய்தழித்துப்
பேய்க்குலம் உண்ணப் பலிகொண்டு போட்டுப் பிணக்குடலை
நாய்க்குலம் கௌவக் கொடுப்பாள் வாராஹி என் நாராயணியே.

## எதிர்ப்பு கட்டு

நாசப் படுவர் நடுங்கப்படுவர் நமன்கயிற்றால்
வீசப் படுவர் வினையும் படுவர்இம் மேதினியோர்
ஏசப் படுவர் இழுக்கும் படுவர்என் ஏழைநெஞ்சே
வாசப் புதுமலர்த் தேனாள் வராரஹியை வாழ்த்திலரே

## பெருவசியம்

வாலை புவனை திரிபுரை மூன்றும்இவ் வையகத்திற்
காலையும் மாலையும் உச்சியும் ஆகளக் காலத்துமே
ஆலயம் எய்தி வாராஹிதன் பாதத்தை அன்பில் உன்னி
மாலயன் தேவர் முதலான பேர்களும் வாழ்த்துவரே.

## தேவி வருகை

எங்கும் எரியக் கிரிகள் பொடிபட தம்பகைஞர்
அங்கம் பிளந்திட விண்மண் கிழிந்திட ஆர்த்தெழுந்து
பொங்கும் கடல்கள் சுவறிடச் சூலத்தைப் போகவிட்டுச்
சிங்கத்தின் மீது வருவாள் வாராஹி எனும் சிவசக்தியே.

## ஆத்மபூஜை

சக்தி கவுரி மஹமாயி ஆயிஎன் சத்துருவைக்
குத்தி இரணக் குடரைப் பிடுங்கிக் குலாவிநின்றே
இத்திசை எங்கும் நடுங்கக் கிரிகள் இடிபடவே
நித்தம் நடித்து வருவாள் வாராஹி என் நெஞ்சகத்தே.

## நவகோண வந்தனம்

வீற்றிருப்பாள்நவ கோணத்திலேநம்மை வேண்டும் என்று
காத்திருப்பாள்கலி வந்தணுகாமல்என் கண் கலக்கம்
பார்த்திருப்பாள் அல்லல் எங்கேஎன்றங்குச பாசம் கையில்
கோத்திருப்பாள் இவளேஎன்னை ஆளும் குலதெய்வமே,

## நிறைமங்கலம்

சிவஞான போதகி செங்கைக் கபாலி திகம்பரிநல்
தவம்ஆரும் மெய்யன்பர்க் கேஇடர் சூழும் தரியலரை
அவமானம் செய்யக் கணங்களை ஏவும் அகோரி இங்கு
நலமாக வந்தென்னைக் காக்கும் திரிபுர ஆனந்த நாயகியே.

## தூப தீப ஆராதனை

நல்லதொரு நறுமணத்துடன் வெற்றிலை பாக்கு பழத்துடன்
அன்னமதையும் ஏற்று அருள்வாய் ஆனந்த வராகி,
வெற்றிலை பாக்கு ஏற்றருள்வாய் வெற்றி வராகி,
கனிவகைகள் ஏற்றருள்வாய் காளி வராகி, கற்பூர தீபம்
ஏற்றருள்வாய் மஹா வராகி.

## தீப ஆராதனை

ஓம பஞ்சமி தண்டநாதா சங்கேதா சமயஸ்வரி
சமயசங்கேத வாராகி போத்ரிணி சிவவாத்தாளி
மஹாசேனா அஞ்சாசக்ரேஸ்வரி ஹரிக்னி நாராயணி
நமோ நமஹ!

## மன்னிப்பு கோருதல்

மனமதுஒன்றியே செய்ததொரு பூசையில் குறையேதும
தான் இருப்பின் மகாவராகியே மன்னித்தருள்வாய்.

பால், தேன, பனனீர், இளநருடன அபிஷேகத்தில் தவறு
இருந்தால் மகா வராகியே மன்னித்தருள்வாய்.

அலலி, அரளி, சாமநதியுடன மறறும இங்கு
அர்ச்சித்த மலரில் தவறு இருந்தால் பஞ்சமியே
மன்னித்தருள்வாய்.

வெறறிலை, பாககு, பழத்துடன விரும்பியதொரு
படையலில் தவறு இருந்தால் மகாவராகியே
மனனித் தருள்வாய்.

வராகியே, பஞ்சமியே மனனிபபாய் தண்டினி மனனிப்பாய்
மகாவராகியே மன்னிபபாய். மனனிப்பாய். மன்னிபபாய்.

வராகி சரணம்     வராகமுகி சரணம்

